உ
சிவமயம்.

# சிவோபாசனாமகிமை.

சிவோபாசனை யென்பது, சிவ உபாசனையென பகுக்கப்படும். அது சிவனை உபாசித்தல் என இரண்டாம் வேற்றுமைத் தொகையாகவும் சிவனது உபாசனை என்று ஆறாம் வேற்றுமைத் தொகையாகவும் விரியும். தடத்தநிலையில் தென்மொழியில் கடவுள் என்பது பகுதி விகுதி என்னும் இரண்டுறுப்புக்களால் முடிந்த தொழிற்பெயர்ப் பகு பதம், அப்பகுபதத்தின் முதற்கண் நின் றகட என்னும் பகுதிக்கும், வடமொழியில் பிரம்மம் என்னும் பதத்தின் முதற்கண் நின்ற, பிருக என்னும் பகுதிக்கும் ஓங்கியிருத்தலெனப் பொருளுண்மையில், அவ் விருபொழிகளும் ஒருபொருண்மேலன (அதாவது) கட, பகுதி - உள் தொழிற்பெயர் விகுதி. எல்லாவற்றையும் கடந்தவன் எனப்பொருள். இன்னும் வைதிகசைவ சித்தாந்திகள் கொண்ட அருட்சிற்சத்தி குணங் களையுடைய சகுணபிர்ம்மமென்பாராய், தெய்வப்புலமைத் திருவருள் ளுவநாயனார் அகரமுதல என்னும் முதற்றிருக்குறளிலே, அக்கடவுளை பகவன் என்னும் சப்தத்தினால் விதந்து கூறினர் கூறவே. பகவன் என்றது, ஞானம், திரு, வைராக்கியம், புகழ், வீரியம், ஐசுவரியம என்னும் அறுகுணங்களும் அக்கடவுட்கு உளவென்பது பெற்றாம் பெறவே,

சிவதத்துவ முதற் பிருதிவியீறாய்க் கிடந்த முப்பத்தாறு தத்துவங்களின் பாற்பட்ட சரீராதிகளையும் அதிஷ்டித்து நிற்பவர் சிவபிரானாதலின் அவர் விஷ்ணு எனப்படுவார் என உபபிருங்கணத்தினும். கூறப்படலானும், இந்தச்சிவதத்துவ முதற்பிருதிவி அந்தமாயுள்ள தத்துவம் முப்பத்தாறனுள், ஆன் மதத்துவம் இருபத்தினான்கும், நான்காவது பிரசினத்து எட்டாவது மந்திரத்தினும், வித்தியாதத்துவம் ஏழும் சிவதத்துவம் ஐந்தும் முறையே சுவேதாசுவதரத்தின் முதலாம் அத்தியாயத்திலும். பிருகச் சபாலத்தினும். இவற்றின் உப பிருங்கணமாகிய கைலாசசங்கிதை ஒன்பதாம் அத்தியாயத்து இருபத்தொன்பதாஞ் சுலோக விறுதியாய்க் கிடந்த ஆறுசுலோகங்களினும் காணப்படுதலானும் ஏனைய பிர்மா முதலிய தேவர்களுடைய வியாபகம் ஆன்மதத்துவத்தின் பாற்பட்ட மூலப்பிரகிருதியின் வரையில் அமைந்து சாவதிவியாபகமாய் முற்றுவதாக, பரங்கருணைத்தடங்கட லாகிய நமது பரமேசுவரப்பிபுவின் வியாபகமோ மூலப்பிரகிருதிசூக்கு மப்பிரகிருதி, பரப்பிரகிருதி என்னும் முத்திறப் பிரகிருதிக்கு மேற்பட்ட நிரவதி வியாபகமாய்ச் சிறந்து நிற்றலின், அவரே முழுமுதற் கடவுளாதல் பெறப்பட்டது. படவே பகவன் என்னும் நாமம் செம் பொருட் சிவத்தை உணர்ந்த சீவன் முத்தர்கட்கும் செல்லுமேனும், அது அப்பரமேசுரபிரபுவிற்கே மேலே உரைத்த வாற்றாற் சென்று அவ்வுலக சிருட்டி அவரிலே முற்றுமாறு திருவள்ளுவநாயனார் பக வன் என்னும் பதத்துக்கு முன்னர் ஆதி என்னும் அடை மொழியை நிறுவி ஆதிபகவன் என்றார். இன்னும் ஆதி என்பது இரண்டு அட்ச ரத்தாலாயது எனவும்

முதல் எனவும் ஓங்கார மெனவும் சாந்தோக் கிய உபநிடதத்தில் கூறிய வாற்றானுந் தெற்றென விளங்கும். நமது சிவஞானசுவாமிகளும்,

## வெண்பா.

“சீர்கொளிரை யொன் றுண்டத்தெய்வ நீயென்றொப்பாற் - சோர் விலசையாற் றெளிந்தோஞ் சோமேசா - வோரில் அகரமுதல வெழுத் தெல்லாமாதி - பகவன் முதற்றேயுலகு" என்றருளினர்.

கிரணமின்றிச்சூரியன் பிரகாசியாத வாறுபோலச் சத்தியின்றிச் சிவபிரான் பிரகாசிப்பால்லர். பராசத்தியார் சிவபிரானார்க்குச் சம வாய சம்பந்தத்தினர் என ஸ்ரீகாலோத்தர ஆகமத்தில்,

“குணபூதா பராசத்தி ததாசிரய குணீசிவகா” எனப்.

பிரதிபாதித்தலினாலும் நன்குவிளங்கும், ஆகாராதி அட்சரங்களுக்கெல்லாம் முதலாய் அகாரம் நின்றாற் போலச் சமஸ்தசீவர்களுக்கும் முதல்வர் சிவனே என்று வாதுளோத்தராக மத்தினும் கூறப்பட்ட உண்மையை உணர்ந்தோம் தெய்வப்புலவனார்,

“அகரமுதல வெழுத்தெல்லாமாதி - பகவன் முதற்றேயுலகு" என்றருளிச்செய்தனர்.

இன்னும் "அகரமுதலானை யணியாப்ப னூரானைப் பகருமான முடையார் வினைப்பற்றறுப்பாரே' எனத்திராவிட சுருதியானுங்கூறப்பட்டது. கடவுளை வணங்குதற்கு மனம் வாக்குக்காய மென்னும் மூன்றுங் காணங்களாயிருக்கின்றன. பனம் அவருடைய வடிவைத் தியானஞ்செய்ய உதவுகின்றது. வாக்கு அவருடைய மந்திரங்களைச் செபிக்க உதவுகின்றது, காயம் அவரை அருச்சித்தற்கும் அவரை வழிபடு தற்கும் உதவுகின்றது. ஆனால் அவர் இம்மூன்றுக்கும் எட்டுபவரல்லர் அதீதமான வஸ்துவாயிருக்கிறார். கடவுள் ஒன்றுக்கும் எட்டாதவருமல்லர் அறிவுக்கு எட்டுபவர் ஆதலால் ஞானிகள் அவரை அறிவினாலடைந்து ஆனந்தமடைகிறார்கள். கடவுள் ஞானானந்தசொரூபி. அதனால் அவரை ஞானம் ஒன்றினால் தான் அறியலாம். மற்றவற்றாலறிய வொண்ணாது. அது எதுபோல வெனின், ஒளிவடிவினதாகிய சூரியனை ஒளிவடிவுடைய கண்ணொண்றினாற்றான் காணலாம். கால் அல்லது மூக்கால் அல்லதுவாயால் அல்லது மெய் யால் அந்தச் சூரியனைக்காண வொண்ணது அதுபோல வென்க.

உலகத்திலுள்ள எல்லாரும் ஞானிகளல்லர். அதனால் எல்லாரும் கடவுளுடைய ஞானவடிவத்தைத் தரிசிக்கமாட்டார்கள். கட்வுள் ஞானிகளை மாத்திரம் உய்விப்பவரல்லர் எல்லா உயிரையும் உய்விக்கும் பெருங்கருணை

யுடையவர். அதனால் அந்தந்த உயிர்களுடைய சக்திக்கேற்ப வணங்கும்படி அவர்பலவிதமான வடிவங்களைக் கொள்ளுகிறார்.

கடவுள் கொள்ளும் வடிவங்களுள்ளே சிலமனத்திற்கு விஷயமாவனவும், சிலவாக்குக்கு விஷயமாவனவும், சிலகாயத்துக்கு விஷயமாவனவுமாயிருக்கும்.

யோகிகள் மனத்தால் கடவுள் வடிவைத் தியானஞ்செய்கிறார்கள். அத்தியானத்துக் கேற்ப கடவுள் கொள்ளும் வடிவம் மந்திர சரீரம் அதனால் யோகிகளுடைய வழிபாட்டிற்கு மந்திரங்கள் சாதகமாயிருக்கின்றன.

புறத்தே செல்லும் இந்திரியங்களை யடக்கி அவற்றின் மயக்கை யொழித்தவர்க்கன்றி மற்றவர்க்கு மனத்தை ஒரு குறியில் நிறுத்தி வழிபாடாற்றும் வன்மையுண்டாக மாட்டாது. அதனால் அவர்கள் பொருட்டுக் கடவுள் புற விந்திரியங்களுக்கு விஷயமாகத் தக்கவடிவங்களைக் கொள்ளுகிறார். அவ்வடிவங்களே ஆலயங்களிலிருப்பன. அதை வணங்குவோர் சரியையாளரெனப்படுவார். அவர்களால் அவ் வடிவங்களைத் தரிசித்தும், வாயினால் தோத்திரஞ் செய்தும், தலை யினால் வணங்கியும், கைகளால் அஞ்சலி செய்தும், கால்களால் வலம் வந்தும், அங்கங்களால் நமஸ்கரித்தும் செவிகளால் தோத்திரங்க ளைக் கேட்டும் இவ்வாறு கடவுள் வணக்கஞ் செய்வர், இது பற்றியே,

"கண்ணு தலாலய நோக்குங் கண்களே கண்கள், கறைக் கண்டன் கோயில்புகுங் கால்களே கால்கள் - பெண்ணொருபா கனைப்பணியுந் தலைகளே தலைகள் பிஞ்ஞகனைப் பூசிக்குங் கைகளே கைகள் பண்ண வன்றன் சீர்பாடும் நன்னாவே நன்னாப். பான் சரிதையேகேட்கப் படுஞ் செவியே செவிகள்".

“அண்ணல் பொலன்கழல் நினைக்கும் நெஞ்சமேநெஞ்சம், அவனடிக்கீழடிமைபுகுமடிமையே யடிமை” - என ஆன்றோர் வாக்காலுந் தெள்ளிதிற்புலனாகும். வேறு சிலர் அகத்தே ஒருவாறு வழிபடு மாற் றூலும், புறத்தே நன்கு வழிபடுமாற்றாலும் உடையவர்களா யிருக்கி றார்கள். அவர்கள் பொருட்டுக் கடவுள் அகத்தே மந்திர லிங்கவடி வத்தையும், புறத்தே தாவரலிங்கவடிவத்தையும் கொள்கிறார். அகத்துச் செய்யும் மந்திரலிங்க வழிபாடு மனத்தாலாற்றுவதும், புறத்துச் செய்யும் தாவரலிங்க வழிபாடு காயத்தாலாற்றுவதும் என இருதிறனாயிருக்கும். அவர் இருதய கமலத்தே மந்திரலிங்கம் வடிவம் பாவித்து அபிஷேக அலங்கார நைவேதன ஆராதனைகளைச் செய்யும் நாபிகுண்டத்தே ஓமஞ்செய்தும் புருவாவே தியானஞ் செய்தும் இவ்வாறு அகப்பூசை செய்வர். இது அந்தர்யாகமெனப்படும். அதன் பின்புபுறத்தே தாவரலிங்கவடிவிற் கடவுளுடைய மந்திரலிங்க வடிவை ஆவாகனஞ் செய்து அவ்வடிவிற் கடவுளை வழிபடுவர் இவர்களுடைய வழிபாட்டுக்கு மந்திரங்களே சாதனங்களாயிருக்கும். அன்றி மனந்தியானித்தலிலும், வாக்கு மந்திரங்களைச் செபித்தலிலும் காயபூசனை புரிதலிலுமாகிய இவர்க்கு முக்கரணங்களும் முதல்வன் வழிபடுவன வாகும்.

சரியையாளர் கிரியை செய்தற்கும் கிரியையாளர் யோகஞ் செய்தற்கும், யோகிகள் ஞானசமாதியுறுதற்கும் வல்லவரல்லர். அதனால் கடவுள் அவரவர் அறிவும் ஆற்றலும் காதலும் நின்றவழி அவரவர் உய்யு நிமித்தம் அவரவர்க்கு எளியராய் ஒவ்வொரு வடிவங்களை இவ்வாறு பலவிதமாய்க் கொள்ளுகிறார்.

கடவுள் கொள்ளும் வடிவங்களை விக்கிரகமென்று சொல்லப்படும். விக்கிரகமென்றால் கண்டித சரீரம் அல்லது சகளத் திருமேனி யென்றர்த்தமாம். மந்திரசரீரங்களும் விக்கிரகங்களே. சிலை 'லோகம் என்பவற்றாலாகிய வடிவங்களும் விக்கிரங்களே. ஆன்மா சரீரத்தைத் தனக்கு இடமாகக் கொள்வது போலவும், அக்கினித் திரியைத் தனக்கு இடமாகக் கொள்வது போலவும், சடவுள் ஒவ்வொரு விக்கிரகங்களைத் தமக்கு இடமாகக் கொள்ளுகிறார். ஆன்மா மலபந்தத்தாற் சரீரங்கொள்ளும் கடவுள் உயிர்கள் மேல்வைத்த பெருங்கருணையினால் அம்மலபந்ததத்தை யொழிக்கு நிமித்தமாக வடிவங் கொள்வர், நம்மவருள்ளும் பலர் மனம் வாக்கு காயங்களுக்கும் அறிவிக்கும் உள்ளதார தம்மியங்களும் அவற்றின் இயல்புகளும் கடவுள் வணக்கத்தில் அவற்றையுபயோகிக்கும் வழிகளும், அவ்வ ணக்கத்தை ஏற்கு நிமித்தம் கடவுள் அவ்வப் பொழுது கொள்ளும் வடிவங்களினியல்புகளும் இவை இவை என்று தோன்றாமையால் விக்கிரக வணக்க முதலியவற்றை இகழ்ந்து துன்பப்படுகிறார்கள்,

காயத்தால் வழிபடினும், மனத்தால் வழிபடினும், அறிவால் வழிபடினும் அவற்றாற்பற்றப்பட்டு அவற்றிற்கு விஷயமாகும் வடிவங்களெல்லாம் விக்கிரகங்களேயா மென்பதனை அவர்கள் கிஞ்சித்தும் சிந்தித்திலர் போலும்

"ஊனடைந்த வுடம்பின் பிறவியே
தானடைந்த வுறுத்யைச் சாருமால்."

என நமது சேக்கிழார் சுவாமிகளருளிய திருவாக்கையும் உய்த்துணர்க. சுபம்.

## காசி காண்டம்.

“அறிவினாலேனும் அருளினாலேனும் அருள் விளையாட்டினாலேனும் கிறுதினாலேனும் வஞ்சகத்தேனும் கிளர்பொருணசையினாலேனும் இறைவன திலிங்கப் பூசனை புரிந்தோ ரெந்தை தன்பெயரினை நவின்றோர் குறைவறு துறக்க மடைவது திண்ணங்கொண்றை வேணியன் றிருவாணை" -

கடவுள் ஒருவர் ஆன்மாக்களாகிய நமக்கெல்லாந் தலைவராக இருக்கிறாரென்றும், அவர் நம்பொருட்டு அதாவது நாம் மலமாயா கன்மங்களிலிருந்து நீங்கி மோட்சமடையும் பொருட்டுச் சிருட்டி திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்னும் பஞ்ச கிருத்தியங்களையியற்றி வருகிறாரென்றும், ஆதலால் அக்கடவுளை நாம் எப்பொழுதும் வழிபட்டு அவருடைய அநுக்கிரகத்தைப்பெற முயலவேண்டு மென்றும் வேதம், ஆகமம், புராணம், இதிகாசம் முதலிய சகல சாஸ்திரங்களும் உரைக்கின்றன. அவர் நம்பொருட்டுச்

செய்யும் அத்தொழில்களிலும் நாம் அவரை வணங்கும் வணக்கத்திலும் நமக்கு உண்டாகும் நன்மையாதென்று நாம் சற்று யோசித்துப்பார்ப் போம். இப்பொழுது மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் பொறிகளால் பரிசம், இரதம், உருவம், கந்தம், சத்தம் என்னும் ஐம்புலன்களையும் நுகர்ந்து அறிவு விளக்கம் பெற்றவர்களாயிருப்பினும் இப்படியே எப்பொழுதும் அறிவுவிளக்கம் பெற்றவர்களாயிருப்பதில்லை. ஒருசமயத்தில் அறிவு விளக்கம் பெற்றும் மற்றொரு சமயத்தில் அறிவு விளக்கமில்லாமலும் இருக்கிறோம். அறிவு விளங்கும் சமயத்தை விழிப்பென்றும், அறிவு விளங்காத சமயத்தை உரக்கமென்றுஞ் சொல்லுகிறோம்.

அறிவுடையோர் விழிப்பைச் சகலமென்றும், உறக்கத்தைக் கேவலமென்றும் உரைப்பர். இப்படி இரண்டு அவஸ்தைகளும் மாறி மாறி வருவதற்கு நியாய மென்னவென்று யோசிக்கில், ஆணவமென் னும் ஒரு மலமானது நம்முடைய அறிவைவிளக்க வொட்டாது தடைசெய்தலால் கேவலம் என்னும் அவஸ்தை உண்டாகிறதென்றும், சில மாயாகருவிகள் அத்தடையை அறிவை விளக்குதலால் சகலம் என்னும் அவஸ்தை நிகழ்கின்ற தென்றும் வெளியாகும்.

நாம் இந்தப் பிறப்பையடைதற்கு முன் இவ்வளவு சொற்ப அறிவு தானும் இல்லாமல் முழுமயக்கத்தி லிருந்தோம். அப்படி யிருந்த நமக்கு இந்த மாயாகருவிகளைக் கொடுத்து அறிவை விளக்கியவர் கடவுளே. அக்கருவிகளைக் கொடுக்கும் அவருடைய செயலே சிருட்டி. அவற்றை நம்மிடத்துச் சிலகாலம் நிறுத்துதலே திதி, அவற்றோடு கூடி அறிந்து ஐம்புல நுகர்ச்சி செய்துவருங்காலத்து நாம் அதனால் இளைப்படையின் அவ்விளப்பொழித்தல் காரணமாக அறிகருவிகளை நீக்குதலே சங்காரம். வினைக்கேற்ற போகங்களை உணர்த்தி ஏனையவற் றை மறைத்துவைத்தலே திரோபவம், வினைக்கேற்ற போகங்களை நுகர்ந்து வருங்காலத்து அதனால் ஆணவமலம் பக்குவப்பட அதன் சத்தி நம்மை மறைத்தற்கேற்ற வலியற்றதா யொழியும்

## சிதம்பர மும்மணிக் கோவை

### ஆசிரியப்பா.

“பூமலி கற்பகப் புத்தேள்வைப்பும்
நாமநீர் வரைப்பி னானிலவளாகமு
மேனைய புவனமு மெண்ணீங்குபாருந்
தானேவகுத்ததுன் றமருகக் கரமே
தனித்தனி வகுத்த சராசரப்பகுதி
யனைத்தையும் காப்பதுன்னமைத்த கைத்தலமே
தோற்றுபு நின்றவத் தொல்லுலகடங்கலு
மாற்றுவ தாரழலமைத்த தோர்கரமே
ஈட்டிய வினைப்பய னெவற்றையு மறைத்து நின்
றூட்டுவதாகு நின்னூன்றிய பதமே
யடுத்தவின்னுயிர்கட் களவில் பேரின்பங்
கொடுப்பது முதல்வநின் குஞ்சிதபதமே"

என நமது குமாகுருபாசுவாமிகள் அருளியவாற்றானுந்தெற்றென விளங்கும். பால்பருகும் சிறு குழந்தையின் நோய்தீர்தற்கு அக்குழந்தையின் தாயானவள் மருந்தருந்தி அம்மருந்து, பாலின்சாரமாக குழைந்தைக்குச் சார்ந்து அக்குழந்தையின் நோய் நீங்குமாறு போல, மலர்தலையுலகின் கண்ணுள்ள ஆன்மாக்களாகிய குழந்தைகளின் பிறவிநோய் தீர்தற் பொருட்டுப் பரமகருணா நிதியாகிய பரமேசுர பிரபு வானவர் சிருட்டியாதி பஞ்சகிருத்தியத் தொழிலைச் செய்கின்றன ரென்பது.

"பாலுண் குழவி பசுங்குடர் பொறாதென
நோயுண் மருந்து தாயுண் டாங்கு
மன்னுயிர் தொகுதிக் கின்னருள் கிடைப்ப"

என்பவற்றானும் விளங்கும். அன்றி மாயாகருவிகள் தரும் அறிவு விளக்கத்தால் நாம் வேத ஆகமங்களை ஓதிக் கடவுள் ஆன்மா மலம் என்னும் திரிபதார்த்தங்களை உணர்ந்து கடவுள் வழிபாடாகிய சிவபுண்ணியம் ஈட்டுதற்கும் உபகாரமாம் ஆதலால் மலநீக்கத்தின் பொருட்டு கடவுள் இந்த உபகாரஞ் செய்து வருவது நமக்கு எவ் வளவு நன்மையாம் கடவுள் நம்மை இவ்வாறு பிறப்பிறப் பிற்புகுத்தி மாயாகருவிகளால் உணர்வெழச் செய்து இன்ப துன்ப நுகர்வித்து வருவதெல்லாம் நம்முடைய மலமாயா கன்மங்களை அறவொழித்து நீக்குதற் பொருட்டாம்.

ஆதலால் இத்தருணத்தை வீணாக்கி விடாது அவருடைய சகாயத்தைப் பின்பற்றி அம்மல மாயாகன்மங்களை யொழிக்கவும், என்றும் அழியாப் பேரின்ப வாழ்வாகிய மோட்சத்தை யடையவும் முயலுதல் வேண்டும். நாம் அம்மல மயக்கத்தில் ஆழ்ந்திருக்கிறபடியால் நாமாக அதைவென்று அந்நிலையை யடைந்து கொள்ள நம்மால் இயலாது. அதில் அமிழ்ந்துந் தன்மையே தவிர அதை வெல்லுந்தன்மை நமக்கில்லை. கடவுளோ அம்மலமயக்கில் ஆழ்ந்தவரல்லர். மலமயக்கில் ஆழாமல் அதை வென்று கீழ்ப்படுத்தி யொழிக்கத்தக்க சிலசத்திகள் அவரிடமிருக்கின்றன. அவை முழுது முணர்தல், முழுதுஞ் செய்தல், நித்தமகிழ்ச்சி, அநாதியாகிய சுதந்திரத்தன்மை, கெடாதசத்தியுண்டமை, அளவிறந்தசத்தியுடைமை என்னும் சாட்குண்ணியங்களாம். அவை அவரிடத்து விளங்குதலினாலே மலமாயா கன்மங்கள் அவரையடையாவாயின, அதுமட்டோ ஆதித்த ஒளியின் முன் இருள்வலிகுன்றி யொழிதல்போல, அவருடைய சந்நிதியில் அவைவலிகுன்றி யொழிந்தும் போகின்றன. நம்மிடத்து அவ்விதசத்திகள் இல்லை அது பற்றியே நாம் அம்மலவலியை வெல்ல இயலாமல் அதனுள் அமிழ்ந்து கின்றோம். ஆனால் அவருடைய அவ்வறுகுணங்களைப் பெறுமுரிமை நமக்குண்டு. அவரைவணங்கி அவருடைய குணங்களை நாம் பெறு வோமானால் அக்குணங்களால் விளங்கும் நம்மை மலமாயா கன்மங்கள் அதன் பின் பந்திக்க மாட்டா. கண் தனித்திருக்கும் போது. இருள் அதனை மறைக்குமாயினும் ஆதித்த வொளியோடு கூடிநிற்கும் போது அணுவளவேனும் மறைக்க மாட்டாது, நம்முடைய காரியமும் அவ்வாறேயாம். இனிமலநீக்கத்துக்கும் சட்குணப்பேற்றிற்கும் நம்மாற் செய்யப்பட வேண்டியவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் வழிபாடுகளாம். அவை உபாயம்

உண்மை என இருவகைப்படும் உபாயச் சரியையாதிகள் இருவினையொப்பு மலபரிபாகம் சத்தி நிபாதம் என்னும் இவற்றிற்கேதுவாம். இவற்றின் நிகழ்ச்சியே பக்குவ மெனப்படுவது. அப்பக்குவகாலத்திலே கடவுள் குருமூர்த்தமா யெழுந்தருளி ஆகமத்திற் சொல்லப்படும் சமயம், விசேடம், நிருவாணம், என்னுந் தீட்சைகளைப் புரிந்து உண்மைச் சரியை கிரியை யோக ஞானங்களில் நிறுத்தி ஞானசமாதி கூடுவித்து அருள் செய்வர். அத்துவ சுத்திசெய்து கன்மமா யைகளைப் போக்கி, உண்மை உபதேசத் தானுந் திருவடி சூட்டு தலானும் ஆணவமல இருளை நீக்கி, அறுகுணங் களையும் ஆன்மாவிற் பதித்து ஆனந்தவாழ்வில் இருத்துதலே தீட்சை யெனப்படுவது, அதன்பின்னர் அச்சிவத்தோடு அத்துவிதமாகக் கலந்து அப்பேரின்பநிலை பிறழாது அதின் மூழ்குதலே ஞானசமாதி யெனப்படுவது.. இச்சமாதி கைவரப்பெற்றால் பரமானந்த நித்திய வாழ்வாகிய முத்தியைத் தலைப்படுவர். ஆதலால் இப்படிப்பட்ட பா முத்தியை நமக்குத் தரவல்ல கடவுளை நாம் என்றைக்கும் மறவாது மெய்யன்போடு வழிபட்டு அவருடைய திருவருளை விரைவில் அடை தற்கு முயலவேண்டுவது ஆவசியகமும் அறிவுடைமையுமாம்.

“செய்யவார் சடைத் தெய்வசிகாமணி
பாதம் போற்றும் வாதவூரன்”

என்பதனாலும்,

"யாதொரு தெய்வங் கொண்டீரத் தெய்வமாகி யாங்கே - மாதொ ருபாகனார் தாம்வருவர்"

என்பதனாலும்,

எவரெவர் எவ்வெத் தேவரைக் குறித்து வழிபடிலும் அவ்வத் தேவரிடமாக நின்று, அவற்றை யேற்று அவரவர் வேண்டிய பயன்களை அளிக்கவல்ல முழுமுதற் கடவுள் சிவபெருமா னொருவரேயென் பார் தெய்வசிகாமணி என்றும், மும்மலவழுக்கை ஞான நீராற் கழுவி மெய்ஞ்ஞானிகளோடு கலந்து கூட்டி அவரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் முதல் எனவே கண்டு வழிப்படுதல் அமன்கழலணைந்த சீவன் முத்தர்க் கியல்பாகலின் போகசாதனமாயுள்ள உட்கரணங்களும், புறக்காணங்களுமாகிய பசுகாணங்க ளெல்லாம் அளத்திற்பட்ட புற்போலச் சிவப்பிரகாசத்தினாற் சிவகாணமாய் நிகழச் சுகானுபவ முதிக்கப் பெறுமென்பதும் பெற்றாம்.

பெறவே, பசுபதியாகிய சிவபிரான் ஆன்மாக்களின் பரிபக்குவத் திற்கியைய அநுக்கிரகிக்கும் வகை பலவற்றுள் திருவேடமே மிகச்சிறப்புற்றன என்பது தொனிக்க,

நமது குமரகுருபர சுவாமிகள்,

**நேரிசையாசிரியப்பா.**

“செய்தவ வேடமெய்யிற் றாங்கிக்
கைதவ மொழுக்க முன்வைத்துப் பொதிந்தும்
வர் திசைக்கின் றய்வாய் பிளந்தன்ன
கடவுண் மன்றிற் றிருநடங் கும்பிட்
டுய்வது கிடைத்தனன் யானேயுய்தற்
கோருபெருந் தவமுமுஞற் றிலனுஞற்றா
தெளிதினிற் பெற்றதென் னெனக்கிளப்பிற்
கூடாவொழுக்கம் பூண்டும் வேடங்
கொண்டதற்கேற்ப நின்றொண்ட சொடுபயிறலிற்
பூண்டவவ் வேடங்காண் டொறுங்காண்டொறும்
நின்னிலை யென்னிடத் துன்னியுன்னிப்
பன்னா ணோக்கின ராகலினன்னவர்
பாவனை முற்றி யப்பாவகப் பயனின்யான்
மேவரப் பெற்றனன் போலுமாகலின்
எவ்விடத் தலநிளை யெண்ணினர் நீயுமக்
றவ்விடத்துனை யெனற்கையம் வேறின்றே

என அருளியவாற்றானும்,

இன்னும் நமது சேக்கிழார் சுவாமிகள் மெய்ப்பொருணாயனார் புராணத்தில் "மெய்த்தவ வேடமே மெய்ப்பொருளெனத் தொழுது வென்றார்"

என ஒரு திருவிருத்தத்தினிறுதியில் அருளியவாற்றானுந் தெற்றென விளங்கும்,

இன்னும் நாம் சிலனை உபாசிக்க வேண்டியவகையில் புறத்தொழில், அகத்தொழில், அறிவுத் தொழில் என முத்திறப்படும். அவற்றுள் அறிவுத்தொழில் ஒன்றே ஆன்மாவின் நேர் வணக்கம், அகத்தொழிலும் புறத்தொழிலும் ஆன்மா வல்லாத அகக்கரண் புறக்கரணங்களாற் செய்யப்படுதலின், ஆன்மாவின் நேர்வணக்க மாகாவாம்.

புறத்தொழில் வணக்கம். அட்டாங்க பஞ்சாங்க நமஸ்காரங்கள் செய்தலும், கால்களால் முதல்வன் எழுந்தருளியிருக்கும் ஆலயத்தைப் பிரதட்சணம் புரிதலும், கண்களால் கடவுள் உயிர்பொருட்டுக் கருணையினாற் கொண்ட சிவலிங்க முதலான திருவுருவைத் தரிசி த்தலும், கைகளால் அவ்வுருவை அர்ச்சித்தலும், வாயினால் அக்கட வுளின் புகழ் முதலியவற்றை நமது சமயாசாரிய அவர்கள் அருளிய தேவார திருவாசக முதலிய அருட்பாக்களினால் ஒதித்துதித்தலும், செவிகளால் முழுமுதற் கடவுளின் திவ்விய சரித்திர முதலியவற்றைக் பாகேட்டுணர்தலும் அவனது திருமேனிக்கு வேண்டப்படும் பூமாலைகளைத்

தொடுத்துக் கொடுத்தலும் திருநந்தனவனப்பணி செய்தலும் ஆலயத்தை அலகிடல் மெழுகிடல், திருவிளக்கேற்றுதல், தூபமிடுதல் முதலானவைகளும் இன்னும் இவைபோல் வன்பிறவுமாம்.

காயத்தொழிற்றொண்டுகள் இன்னும் பலவுன வாயினும் அவற் றை இங்குவிரிக்கிற் பெருகுமென் றெண்ணி விடுத்தாம்.

ஆகவே இனி அகத்தொழில் வணக்கம், காயத்தின் உள்ளிட மான மூலாதாரம் சுவாதிஷ்டானம் மணிபூரகம் விசுத்தி அநாகதம் ஆஞ்ஞை என்னும் ஆதாரங்களின் முதல்வ னுருவைப் பாவித்து மனத்தினாற் சிந்தித்தலாம். காயத்தொழிலும் காயத்திலுள்ள இந்திரியங்களின் தொழிலும் இங்கில்லாமையால், காயமும் இந்திரியமும் ஒடுங்கியடங்கி நிற்க அகக்கருவியாகிய மனமே தியான வியாபாரஞ் செய்துகிற்றலின், இவ்வணக்கம் அகத்தொழில் வணக்க மென்று சொல்லப்படும். புறக்கருவியினும் அகக்கருவி ஆன்மாவோடு அந்தரங்கவுரிமை யுடையதாதலின், புறக்கருவியாற் செய்யும் வணக்கத் தினும் அகக்கருவியாற் செய்யும் வணக்கம் விசேட முடைத்தாம். அன்றியும் புறக்கருவிகளை முதல்வன் வணக்கத்திற் செலுத்துங்கால் அவை அவ்வணக்கத்தில் நிலைத்து ஒடுங்கி யமைந்து நிலலாமல் வேறுபட்ட உலக விடயங்களைத் தாவிச்செல்லும். அதனால் அவ்வணக்கம் பூர்த்தியாதலின்றிச் சிதைவுபடும். அகத்தொழில் வணக்கத்தில் இயமநியமங்களுடையனாய் ஆசனமிட்டு இருத்தலினாலும் பிராணாயாமஞ்செய்து வாயுவை நிறுத்துதலினாலும், பிரத்தியாகாரத்தால் இந்திரியங்களை ஒடுக்குதலினாலும், காயமும் இந்திரியமும் விடயவியாபாரமற்று அடங்கி யொடுங்கித் தொழிலின்றி நின்று விடும். தாரனை யினாலே அகக்கருவியாகிய மனம் வேறு வியாபாரமின்றி ஒருநிலைப் படும். தியானத்தினாலே அம்மனம் ஆதாரங்களிற் பாவிக்கப்படும் முதல்வன்றிருவடியையே பற்றி நிற்கும், சுபம்.

இது பற்றியே நமது குமாகுருபர சுவாமிகள்

"தானவனாகிய தன்மை பெற்றானடி தாழப் பெற்றாற்
றானவனாகிய தன்மை பெற்றுய்வனத் தன்மையின்றித்
தானவனாகிய தன்மை பெற்றேற் கருடாழ்சடிலத்
தானவனாகம் பெறா மாசிலா மணிச் சம்பந்தனே.

என அருளிய கட்டளைக்கலித்துறையானும் இனிது விளங்கும் சமாதியில் ஆதாரங்கடந்த பொருளாகிய முழுமுதற் கடவுளினது இலயத்தான மாகிய அருவமென் னும் நிட்கள வடிவில் மனம்லயிக்க உயிர் அதில் அழுந்தும் அது முழுமுதற் பொருளின் அருளை உயிர் பெருதற்கு ஏதுவாம் இதனால் இயமம், நியமம், ஆசனம், பிராணா யாமம், பிரத்தியாகாரம். தாரணை, தியானம், சமாதி என்னும் எட் டங்கங்களோடுகூடிய யோகநிலை பற்றிச் செய்யப்படும். அகத்தொழில் வணக்கம் பிறவிக்கு எதுவாகிய உலகவிடய ஆசையற்று முழு முதற்கடவுளின்

றிருவடியில் ஆன்மா அழுந்து தற்கேற்ற பெருஞ்சா தனமான தொன்டென்பது உண்மையாமென்க.

எனவே ஆன்மா அநாதிப்பொருள், மலமும் அநாதிப்பொருள்

"நெல்லிற்குமியும் நிகழ்செம்பினிற் களிப்புஞ்
சொல்லிற் புதிதன்று தொன்மையே
வல்லிமல கன்மமன் றுளவாம்."

என சிவஞானபோத வெண்பாவானுந் தெற்றென விளங்கும்,

ஆன்மா மலம் இரண்டும் சமவியாபக முள்ளன ஆன்மா அறிவைக் குணமாகக் கொண்டிருத்தல் போல மலமும் அவ்வறிவைத் தடை செய்யும் ஆற்றலைக் குணமாகக் கொண்டுள்ளது. இவ்விரு பொருளும் அநாதியே தம்முட் சம்பந்தப்பட்டிருத்தலால், ஆன்மாவின் அறிவை மலம் தடைசெய்வதாயிற்று அன்றி, ஆன்மாவின் ஞானசத்தி மலச்சத்தியினாலே தடைப்படுகின்றது என நன்கு விளங்கிக் கொள்ளல் வேண்டும்.

இங்ஙனமாயின் அகத்தொழில் வணக்கம், புறத்தொழில் வணக் கத்தினும் விசேடமுடைத்தாதற்குத் தடை என்னை இனி இந்த அகத்தொழில் வணக்கத்தினும் அறிவுத்தொழில் வணக்கம் அதிவிசேட முடைத்தாம்.

காயம். இந்திரியமாகிய புறக்கரணமும் மனமாகிய அகக்கரணம் ஆன்மாவின் வேறான பொருள். ஆன்மா கேவலத்திலே, தன் இச்சா ஞானக்கிரியைகள் மலத்தினாலே தடுப்புற்றிருந்து சகலத்திலே ஒரு சிறிது ஏகதேசமாக விளங்கப் பெற்றிருப்பது. இப்பந்தநிலையில், அகக்கருவி புறக்கருவிகளாகிய துணைப் பொருள்களைக் கரணங்களாகப் பெற்றே அறிவு இச்சை தொழில்களின் வியாபாரத்தைப் பெறும்.

அவ்வியல்புடைய ஆன்மாவுக்கு முதல்வனை வணங்கும் வணக் கத்திலும் இக்கரணங்கள் ஆவசியகம் வேண்டப்படுகின்றன. அவை மாயாகருவி கரணங்களாகலின் அவற்றோடு கூடிய வணக்கங்கள் அறிவுத்தொழில் வணக்கத்தை நோக்கக்குறைபாடுடையனவாம்.

அறிவுத் தொழில் வணக்கத்தில் ஆன்மா அருளோடு சம்பந்தப் பட்டு மலத்தடை நீங்கி மாயாகருவி கரணங்களை விரும்பாது அவற் றினும் நீங்கிஏகதேச அறிவுடையனாதலின்றித் திருவருளினால் விளக்க முற்ற வியாபக அறிவு இச்சைத்தொழில்க ளுள்ளவனாய் அகண்டாகார நித்திய வியாபக சச்சிதானந்தப் பொருளாகிய சிவத்தில் அவ்வறிவு இச்சைத்தொழில்கள் மூன்றும் அழுந்தப்பெற்று அச்சிவத்தின் ஆனந்தத்தை நுகர்ந்து சிவமும் தானும் வேற்ற நிற்கப்பெறுதலாகிய அத்துவித சம்பந்த முற்றிருத்தலின் ஆன்மாவினால் நேரிற் செய்யப்படும் அவ்வணக்கம் பிறவற்றினும் அதிவிசேடமுடைய தென்பது நாம் கூறாதே நிகழும்.

அத்துவித சம்பந்த முற்றிருத்தலாவது இருபொருளும் விரவு தல் (அதாவது) அபேதமாயிருத்தல்

நமது குமரகுருபர சுவாமிகள் ஞானாசாரியர்மீது இயற்றிய மும் மணிக்கோவையில்,

**(நேரிசை வெண்பா.)**

"எற்கமலஞ் செய்யுமெழின் மாசிலாமணிதாட்
பொற்கமலஞ் சென்னி பொலிவித்தே - னற்கமலை
யூரிற்குறுகினேன் ஓர்மாத் திரையளவென்
பேரிற் குறுகினேன் பின்."

என்றருளிய வெண்பாவும் இதற்குறு சான்றாம்.

இந்த வணக்கங்களையே சரியை கிரியை யோகம் ஞானம் எனச் சைவ நூல்கள் நான்காக வகுத்துக் கூறும்.

பரம கருணாநிதியாகிய பரமேசுவரபிரபுவை வணங்குதலில் சித்கியாதி வேறுபாடுகளிருத்தலால் இவ்வேறுபாடுகளை நன்காராய்ந்து அவ்வவ்வுயிர்கள் இயல்புக்கேற்ப பரமேசுர பிரபுவை வணங்கியுய்யும் பொருட்டே இவ்வணக்கங்கள் விதிக்கப்பெற்றன. ஆனதால் இயன்ற தொன்றை அநுட்டித்துப் பரமேசுவரபிரபுவை வணங்கி அருள் பெற்று இப்பிறவித் தொல்லையானீங்கி முத்திபெருதற்கு முயலுதல் அறிவுடையோர் கடமையாம்.

“ஐயினான் மிடறடப்புண்டாக்கைவிட்டாவியார் போவது மேயகத்தார் கூடி - மையினாற் கண்ணெழுதி மாலை சூட்டி மயானத்திலிடுவதன் முன் மதியஞ்சூடும் ஐயனார்க் காளாகியன்பு மிக்குயகங்குழைந்து மெய்யரும்பி யடிகள் சாதங்கையினாற் றொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாய்ப்பூர் நடுதறியைக் காணலாமே".

என நமது ஸ்ரீ வாகீசப்பெருமான் அருளியவாற்றானும் தெற்றென விளங்கும்,

நம் சைவ ஜனங்கள் பலர் சிவபூசை செய்யாமலே தம் வாழ்நாளை அவமாய்ப் போக்கி விடுகிறார்கள். சிவபூசை செய்வதென்றால் பெரிய மலைபோலநினைத்து மயங்கிப் பின் செய்வோம். இன்னும் காலம் இருக் கின்றது இப்பொழுதே அந்தச் சுமையை நம்மால் சுமந்துகொள்ள முடியுமா? நமது குடும்ப காரியங்களை யெல்லாம் சீராக்கிக்கொண்டு பின்செய்வோம் பின் செய்வோம் என்று காலத்தைத் தவணைபோட்டு விலக்குகிறார்கள். நேரமில்லை என்று கருதுகிறார்கள். நேரமில்லாமல் எங்கே போய்விட்டது. இறந்து விட்டதா? இல்லை, நேரமில்லை என்று விட்டு என்னசெய்கிறார்கள், குடும்பவேலையில் முந்துகின்றார்கள்.

தற்காலத்திலே சிவபூசை புரிவோர் பதினாயிரத்துக் கொருவரென்று மனம் வரவில்லை. லட்சத்துக் கொருவரென்று கூறுவது மெய்யாகவே ஏற்படுமேனும் அச்சிறு தொகையை வாய்விட்டுக்கூற நாவெழ வில்லை. காற்றுள்ள போதே தூற்றிக்கொள் என்பது மூதுரை, இன்னும், நீரிற்குமிழியிளமை என்றார் நமது குமரகுருபரனார், இந்தஜன் மத்திலேயே சிவனையுணர்ந்து வழிபடல் வேண்டும். அஞ்ஞானத்தையகற்றி ஞானத்தைப் பெறவேண்டும். அந்த ஞான சொருபியாகிய எம்மிறைவனைப் பூசிக்கவேண்டும்,

ஆதியில் தேவர்கள் சிவபிரானைப்பூசித்தே தம்பெரும்பதங்களை பெற்றார்கள். விஷ்ணுதேவர் அடியாருள் முதல்வர், அவர்பூசித்து வழிபட்ட தலங்களை நாம் இப்பொழுதுங் காண்கின்றோம், அவர் ஆயிரம் அரும்பூகொண்டு பூசிக்குமண்ணல். இதுபற்றியே "கடனி றவண் ணன் கண்ணொன் றிடந்து, மறைச்சிலம்பரற்று மலாடிக்கணிய"' என்றார் நமது சிவப்பிரகாச சுவாமிகள். இன்னும்

**பண், குறிஞ்சி.**

"மாலாயிரங் கொண்டு மலர்க்கண்ணிட வாழி
யேலார்வலயத் தோடீந்தானுறை கோயில்
சேலாகிய பொய்கைச் செங்கழுநீர்க் கமலங்கண்
மேலாலெரி காட்டும் வீழிம்மிழலையே".

என நமது ஸ்ரீஞானசம்பந்த சுவாமிகள் அருளியவாற்றானுந் தெற்றென விளங்கற்பாலதே. தாராகாக்கன், கமலாக்கன் வித்தியுன்மாலி என்னும் முப்புரத்தார் அடைந்தமேன்மை எல்லாம் சிவபூசையினா லல்லவா? பின் அவர் தம்மகிமை குறைந்து நிலைகுலைந்தமை எதனால், சிவவழிபாட்டைக் கைவிட்டமையாலல்லவா? ஸ்ரீராமபிரான் கொலைப் பாதம் போக்கிக் கொண்டமையாது செய்து? சிவபூசையினாலல்லவா?

பரமகருணாநிதியாகிய எம்மிறைவன் இவ்வுலகில் நாமெல்லாம் வணங்கியுய் தற்பொருட்டே பற்பல தலங்களில் திருக்கோயில் கொண்டெழுந்தருளி இருப்பதை நமது சமயாசாரிய சுவாமிகள் பல தலங்கட்கு எழுந்தருளிப்பல அற்புதங்களினால் இவ்வுலகிற்கு நன்குவிளக் கினமையானுந் தெள்ளிதிற்புலப்படும்.

இவ்வுலகமனைத்தும் ஒருகால வெல்லையிலே தோன்றி நின்று அழியுங்காரியப் பாட்டினையுடையவை யாதலால், இவற்றை இங்ஙனங் காரியப்படுத்துகின்ற ஒருபொருள் இவற்றின் வேறாக உண்டென்று நிச்சயிக்கப்படும். அப்பொருள் இவ்வுலகம் போல முத்தொழிற்படா மையினாலே அநாதி நித்தியவஸ்துவாயும், எல்லாவுலகையும் தன் கீழ்வைத்துக் காரியப்படுத்துதலினாலே தானே சர்வ கர்த்தாவாகியும், எல்லாவுலகினும் நிரைந்து நின்று காரியப்படுத்துதலினாலே சர்வபரி பூரணமுடையதாயும், எல்லாவுயிர்களுக்கும் பந்தம் நீக்கி மோட்சத்தைக் கொடுத்தலினாலே

சர்வகாருண்ய முடையதாயும், அவ்வவ் வான்மாக்கள் செய்த வினைப்பகுதிகளை யுணர்ந்து அவ்வவ்வினைப் பாகங்களை அவ்வவ்வர்க்கு, அவ்வவ்வக்காலத்து வழுலாது ஊட்டு வித்தலினாலே சர்வஞானமுடையதாயும், எல்லாக் காரியங்களையும் தன் னெண்ணப்படியே நடத்தி முடித்தலினாலே சர்வசுதந்திர முடையதாயும், எல்லா வுலகங்களையும் ஒருங்கேவைத்துத் தொழிற்படுத்துதலினாலே சர்வசத்தியையுடையதாயும், இன்னும் அளவில்லாத மகிமைக் கிணங்களுள்ள தாயும் விளங்கும் அந்த உன்னதமுள்ள வஸ்துவே நம் மரபிற் கடவுள் என்று கூறப்படுவது.

அக்கடவுள் தோற்றங்களில்லாதவராதலினாலே அவருக்கு ஒரு உருவமிருக்குமென்று சொல்ல இடமில்லை? உருவமில்லாமையினாலே ஒரு பெயருண்டென்னவும் இடமில்லை. உருவும் பெயரும் இல்லா மையினாலே அவருக்கென ஓர் ஊர் உண்டென்று கூறவும் இடமில்லை. இவை இல்லாமையினாலே அவருக்கென ஒரு தொழிலிருக்குமென்று சொல்லவும் இடமில்லை.

அவர் அங்ஙனம் தமக்கென ஓர் ஊரும் பெயரும் உருவும் தொழிலும் இல்லாதவராயினும் ஆன்மாக்களிடத்து வைத்துள்ள பெருங் கருணையினாலே அவ்வான்மாக்களைப் பந்தித்தபாசத்தை நீக்கிக்களை தற்பொருட்டு ஊரும் பேரும், உருவும் தொழிலும் கொண்டருளுவர். அதனால் அவருடைய நிலை சொரூபமென்றும் தடத்தமென்றும் இரு வேறுவகைப் படுவதாயிற்று,

## திருத்தாண்டகம்.

"அரியானை யந்தணர் தஞ்சிந்தையானை யருமறையினகத்தானை யணுவையார்க்குந் - தெரியாத தத்துவனைத் தேனைப்பாலைத் திகழொளியைத் தேவர்க்கடங்கோனை மற்றைக் - கரியானை நான் முகனைக்கனலைக் காற்றைக் கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற - பெரியா னைப்பெரும்பற்றப் புலியூரானைப் பேசாதநாளெல்லாம் பிறவாநாளே."

இவ்வருட்பாவின் ஈற்றில் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே, என்றருளியது இவ்வான்மா, மனிதஜன்மத்தை யடைந்தும் அதனாலெய்தும் பயனையடையாது வீணேகாலங் கழிப்பதுமாம்.

பரமகருணாநிதியாகிய சிவபிரான், இவ்வான்மாக்கள் உய்தற் கேதுவாகிய பிரபஞ்சமும் பிரபஞ்சகர்த்தாவாயும் திகழ்கின்றார் அவ்விதம் விளங்கினும் அவரது உருவம் எல்லாம் சிவசத்தி வடிவினதே யாம்.

இதனாற் சிவம் சதாசிவம் மஹேஸ்வாரென்றும், லயபோகாதிகா ரென்றும், நிஷ்கள, சகளநிஷ்க்கள, சகளரென்றும் பரியாய நாமங்களைப் பெறுவர். பின்வரும் பௌட்கராகம சுலோகத்தானும் தெற்றன விளங்கற்பாலதேயாம்.

“லயாதிகோப்பியம் பேதசக்த்தி தஸ்த்து ததஸ் திதகா பிந்து க்ஷொபோயதசம்போ சக்த்தேரெவ ப்ரவர்த்ததெ"

யாதினுந்தோய்வின்றி நிருபாதிகமாய்ச் சொயம்பிரகாசமாய் நிற்கும் அவ்வுண்மை நிலையே சொரூபமெனப்படும். உயிர்கள் பொருட்டு ஊரும் பேரும் உருவுந்தொழிலும் உடைய அந்நிலை தடத்தமெனப்படும். நிருபா திகவஸ்துவாகிய கடவுள் அங்ஙனங் கொள்ளுமிடத்தும் தம்மில் நீக்கமறநின்ற சத்தியினிடமாகக் கொள்வரேயன்றி ஏனையயிர்த் தொகுதி போல மாயையிடமாகக் கொள்ளமாட்டார்.

அவர் தம் முண்மை நிலையிற் சிவமெனப்படுவர். ஆணவமல உபாதியை நோக்கிச் சகியாமையாற் பிறந்த அச்சிவத்தின் இரக்கமே பராசத்தி யென்று கூறப்படும்.

அச்சத்தியிலடங்கி அபின்னமாக நிற்குமவதரத்தில் அவர்பரன் எனப்படுவர் அப்பராசத்தி ஆன்மாக்களின் ஆணவமலத்தைத் தீர்ப்பதற்கு நம்மையன்றி வேறொருவருமில்லை யென்று நின்ற அவதரத்தில் ஆதிசத்தியெனப்படும் அம்மலத்தை நீக்கும் இச்சையுற்று நின்ற பொழுது இச்சாசத்தியெனப்படும், அம்மலத்தின்றரத்தையும் பிரார்த்தகன்மத்தின் சுபாவத்தையும் அறிந்து நின்றபொழுது ஞானசத்தி யெனப்படும், அப்பராசத்தி ஆன்மாவின் சகசமாகிய ஆணவமலத்தை யொழித்தற்கு ஆகந்துகமாகிய பிராரத்தகன்மமலம் திரோ தமலம், சுத்தமாயாமலம், அசுத்தமாயாமலம், என்னும் நாலையுங் கூட்டவேண்டுமென்று நின்ற அவதரம் கிரியாசத்தி யெனப்படும்.

இந்த பஞ்சசத்திகளும் சிவாம்சமென்றே கூறலாம்.

முன்னர் கூறியபடி ஆன்மாக்களின் ஆணவமல உபாதியை நோக் கிச் சகியாமையிற்பிறந்த அச்சிவத்தின் இரக்கமே சாத்தியெனப்படும்.

## சிவஞானசித்தியார்.

"சிவஞ்சத்திதன்னையீன்றும் சத்திதான் சிவத்தையீன்று - முவந் திருவரும் புணர்ந்திங்குல குயிரனைத்து மீன்றும் - பவன் பிரமசாரி யாகும் பான்மொழிக் கன்னியாகுந் - தவந்தரு ஞான த்தோர்க்குத் தன்மைதான் றெறியுமன்றே'.

என இத்திருவிருத்தத்தானும் நண்குணரப்படும்.

இந்தப் பஞ்சசத்திமூர்த்திமான பரனுக்கு அருவமாகிய பரநாத மென்றும் ஆதிசத்திமுதலான நான்கு சத்தியையும் உசையதாய்நின்ற பராசத்திக்கு அருவமாகிய பரவிந்து வென்றும் பெயருண்டாம்.

இப்பரநாதமும் பரவிந்துவும் ஞானிகளுக்குத் தரிசனமாம். பராசத்தி ஆன்மாக்களுக்கு ஆகந்துகமலத்தை கூட்டுவிக்குந்தரமாக நிற்கவேண்டுமென்று நின்ற அவதரத்திற்றோன்றிய அருவமாகிய சிவத்துக்கு அபரநாதமென்றும் இதற்கு அபின்னமாகிய சத்திக்கு அருவமாகிய அபரவிந்து வென்றும் பெயருண்டாம். இவ்விரண்டும் யோகிகட்குத் தரிசனமாம் இந்த அபரசத்தி ஆன்மாக்களுக்கு ஆணவ'மலந்தியப் பிரார்த்தகன்மத்தைக் கொடுக்க வேண்டு மென்று நின்ற அவதாத்திற் றோன்றிய சிவமும் சத்தியும் அநுக்கிரக்கிருத்தியத்தையும் அருவுருவத்தையுமுசைய சதாசிவமும். மனோன்மணியும் எனப்படும். அச்சத்தி பிராரத்தகன்மத்தை ஒவ்வொன்றாக மறைத்து மறைத்துக் கொடுக்கவேண்டுமென்று நின்ற அவதரத்திற்றோன்றியது திதிகிருத்தியத்தையும் உருவத்தையும் உடைய மகேசுரனும் மகேசுரி சத்தியுமாம். அச்சத்தி உயிர்கட்கு இளைப்பொழித்தலே துவாகப் பிராரத்தகன் பத்தை மாற்றி மாற்றிக் கொடுக்க வேண்டுமென்று நின்ற அவதரத்திற்றோன்றியது சங்காரத் தொழிலையும் உருவத்தையும் உடைய உருவத்திரனும் உமையுமாம். ஆன்மாவினறிவிலே இந்த பிராபத்தகன்மம் அறியப்படும் தொழில் நிகழ்வதற்கு அந்தக்கரணத்தை நிறுத்த வேண்டுமென்று நின்ற அவதரதிற் றோன்றியது திதி கிருத்தியத்தையும் உருவத்தையும் உசைய விஷ்ணுவும் இலக்குமியுமாம் பிரார்த்தகன் மத்தை அறியுந்தொழிலை நிறுத்துதற்குத் தாரகமாக அறிகருவிகளாகிய இந்திரியங்களைக் கொடுக்க வேண்டுமென்று நின்ற அவதரத்திற்றோன்றியது சிருட்டித்தொழிலையும் உருவத்தையும் உடைய பிரமாவும் சரஸ்வதியுமாம் இவ்வைந் துந்தேவர்க்குத் தரிசனமாம்.

இவையே அவருடைய சொரூபதடத்தநிலை யென கூறப்படும்.

சிவாநுக்கிரகத் தன்மை இவ்வித மிருத்தலால் இவற்றை நன்காராய்ந்து அவனது திருவருளைப் பெறமுயன்று இப்பிறவித்தொல்லை யினீங்கி முத்தி எய்துதலே ஆவசியகமும் அறிவுடைமையுமாம்.

சிலவீணர்கள் அவ்விதம் முயல்பவர்களைத் தடைசெய்து. அவர்களையுங் கெடுத்துத் தானும் சிவத்துரோகிகளாகிறார்கள்.

"யாவரேன் மழுவலானையிகழ்வ ரேலுடனே யந்தப் - பாவரை யடுதல் வேண்டும் படாதெனிற் பழிமேல் வைத்து - வீவதேவேண்டும் ஆவிவீய்ந்திடடாகவ்வூர்விட்டுப் - போவதே வேண்டும் வேண்டார் பொருந்துவர் சிவத்துரோகம்".

என்ற ஆன்றோர் வாக்கை நன்குணரற்பாலது.

"யாதொரு தெய்வங்கொண்டீ ரத்தெய்வமாகி யாங்கே, மாதொரு பாகனார் தாம் வருவர் மற்றத்தெய்வங்கள், வேதனைப்படு மிறக்கும் பிறக்குமேல் வினையுஞ்செய்யு, மாதலா னிவையிலா தானறிக் தருள் செய்வனன்றே"

எனச் சிவஞானசித்தியார் திருவிருத்தத்திற்கூறியபடி எவரெவர் எவ்வெவ்வத் தேவரைக்குறித்து வழிபடினும் அவ்வவ்வத் தேவரிடமாக நின்று அவ்வழிபாட்டை யேற்று அவரவர் வேண்டிய பலன்களை அளிக்கவல்ல முதற்கடவுள் சிவபெருமானொருவரே என ஒருதலையாகத் துணியக் கிடந்தன.

இது பற்றியே நமது சிவப்பிரகாசரும் தெய்வசிகாமணி என்றருளினர்.

“அநாதிமுத்த சித்துருவாகிய முழுமுதற்கடவுள் சிவபிரானொரு வர்க்கே பிறப்பில்லை என்பதற்கு,

"எல்லார் பிறப்புமிறப்பு மியற்பாவலர் தஞ், சொல்லாற்றெளிந்தே நஞ்சோணேச - ரில்லிற், பிறந்தகதையுங் கேளேம் பேருலகில் வாழ்ந் துண், டிறந் தகதையுங் கேட்டிலேம்"

என, அருணகிரியந்தா தியானும் உரைக்கிடந்தன.

இத்தன்மைத்தாய முழுமுதற் கடவுளை உபாசித்து மோட்ச மடைய முயலவேண்டும். ஒருவன் மோட்சமடைதற்குச் சாதனமா யுள்ளது ஞானம். அந்தஞானம் உண்மை உபதேசத்தான் எய்தற் பாலது. அவ்வுபதேசமோ ஒருகுருவின் றிருவாக்கால் நிகழத்தக்கது, குருவோ அவரவர் பக்குவகாலங்கண்டே எழுந்தருளிவந்து உபதேசஞ் செய்வர்.

ஆதலால் மோட்சமடைய விரும்புகிறாருவனுக்கு முதற்கண்ணே பக்குவம் உண்டாகவேண்டியது அவசியமாம். அப்பக்குவம் சிவபுண்ணியத்தால் வரவேண்டும். சிவபுண்ணியமாவது சிவபெருமானை நாம் வணங்கும் வணக்கத்தால் வரும் வினை நிகழ்ச்சியாம்,

நாம் வணங்கி முத்தியின்பம் பெரும்பொருட்டே இவ்வுலகில் பலதலங்களைத்தமக்கு வாசஸ்த்தானமாகக்கொண்டு ஆலயத்தில் எழுந் தருளி யிருக்கின்றார் ஆலயவழிபாடு எவற்றிலும் சிறந்தமையை,

"என்று கூடுமிப்பருவ மென் றியம்பில் யாமிருந்துளவிடந்தொறு மிறைஞ்சி, நன்றிசேர் சிவபுண்ணியம் புரியும் நன்மையாலது நானாகு மென்றறி நீ"

என வாதவூரடிகள் புராணத்தானும் முதல்வனென்றே வழிபடு தலை

செம்மலர் நோன்றாள் சேரவொட்டா
வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலறநேய மலிந்தவர் வேடமு
மாலயந்தானு மரனெனத் தொழுமே.

எனச் சிவஞான போதத்தானும் தெளியக்கிடந்தன. ஆன்மாக்க வய்தற்குரிய இவ்வுலகில் தன்வயத்தனாதன் முதலிய எண்குணங்களுடைமையின் சிருட்டியாதி கர்த் திருத்துவ முதலியவற்றை அருள் விளையாட்டி னெய்தினர் என்க.

எனவே இனி உயிர்கள் பொருட்டு அவராலே செய்யப்படுகின்ற கிருத்தியங்கள் சிருட்டி, திதி, சங்காரம், திபோபவம், அநுக்கிரகம் என ஐந்து வகைப்படும்.

அறிகருவிகளாகிய இந்திரியங்களைக் கொடுத்தலே சிருட்டி, அறி கருவிக்காதியாகிய மனமுதலிய கரணங்களை நிலைநிறுத்தலே திதி, அறிகருவியை நீக்குதலே சங்காரம், அறிதற்றொழில் நிகழுமிடத்து இன்பதுன்பங்களைக் கொடுத்து அதில் அறியாமையைச் செய்தலே திரோபவம், அறிதற்றொழில் நிகழ்வித்தலே அநுக்கிரகம். கடவுள் இங்ஙனம் ஐந்தொழிலியற்றல் யாதுக்கெனில், உயிர்களைப்பந்தித்த ஆணவ மலம் ஒழிதற்பொருட்டாம், மலநோயைத் தீர்க்குங் கடவுள் ஒரு வைத்தியராவர், மலபந்தத்தால் வருந்தும் உயிர்கள் பிணியாளராவர்.ஆணவ மல பந்தமே பிணியாகும், அப்பிணிக்கு மருந்தாயுள்ளது பிரார்த்தகன்மம், அம்மருந்தை வைத்துண்ணும் பாத்திரமாயுள்ளது மாயையினாலாகிய சரீரம், அம்மருந்தை யுண்பித்துப் பிணியை நீக்கும் வைத்தியமே பஞ்சகிருத்தியமா மென்றறிக.

அவர் இங்ஙனஞ்செய்யும் ஐந்தொழிலினாலே மலவலிகுன்றி மடங்கும், அதனாற் புண்ணிய விளைவு மேம்படும். அதனாற் சிவபுண்ணியம் மேலும் அதனால் இருவினையொப்பு மலபரிபாகங்களுள்வாம், அத னாற் சத்திநிபாதம் பிறக்கும், அதற்கேற்பகடவுள் ஆசாரியமூர்த்தியா யெழுந்தருளிச் சமயவிசேட நிருவாண தீட்சைகளைச் செய்து, சரியை, யோக ஞானங்களில் நிறுத்திச் சாலோக்கிய, சாமீப்பிய, சாரூப்பிய, சாயுச்சியங்களாகிய அபரபர முத்திகளைத்தந்து, மலநீக்கமும் சிவப்பேறும் உதவிச் சுத்தாத்துவித முத்திநிலையில் இருத்தி என்றும் அழியாப்பேரின்ப வாழ்வாகிய பரமானந்த வைபவத்தை ஆன்மாக் களுக்கு அளித்தருளுவர்.

ஆனதால் இவ்விதம் எளிதில் அளிக்கவல்ல சித்துகளைப்பெருங் கருணா சமுத்திரமாகிய முழுமுதற்கடவுளை நாம் என்றென்றைக்கும் மறவாது மெய்யன்போடு வழிபட்டு அவர் அருளிச்செய்த வேதசிவாகமவழி யொழுகி அவரது திருவருளைப் பெற்று அவராலே தரப்படு கின்ற திருவடிப் பெரும்பேறாகிய முத்திநிலையை எய்துதல் தெள்ளி யோர் கடைமையாகும்.

இங்ஙனம்,

S. நடேச தேசிகர்,

கவர்ன்மெண்ட் ஸ்கூல், தமிழ்ப்பண்டிதர்,கோட்டுச்சேரி,

சித்தாந்தம் - 1914 / 1915 / 1916 ஆ -

நவம்பர், ஜனவரி, மார்ச், ஏப்ரல், மே, ஆகஸ்டு, பிப்ரவரி, மீ